ஸம்ஶ்லேஷியாநின்றுள்ளவளான. இதுக்கு உபமாநம் மேல்—(காரார்ந்தவித்யாதி) மேக₄ங்கள் செறிந்துள்ள ஆகாசத்திலே அமர்ந்த மின்னைக் காட்டாநின்றுள்ளாளுமாய். ஆஶ்ரிதரக்ஷணத்திலே குளிர நோக்காநின்ற கண்ணையுடையாளாய்.

---

கொண்டு அநவரதம் ஸம்ஶ்லேஷிக்கும்படியிருக்குமவளாய். மேகங்கள் நிறைந்திருந்துள்ள ஆகாஶத்திலே பொருந்தின மின்போலே கறுத்த திருநிறத்துக்குப் பகைத்தொடையாக ப்ரகாஶியாநிற்பாளாய், ஆஶ்ரிதவ ர ஸஹ்ருத₃யமாகக் குளிர நோக்குகிற உதா₃ரமான தாமரையைப் போலேயிருக்கிற அழகுநீண்ட திருக்கண்களையுடையளாய் தேன் நிறைந்

---

ஸமாஶ்ரயணீயையாயிருப்பவள் இவளேயாவாள் என்று கருத்து. (காரார்ந்த வானமரும் மின்னிமைக்கும் திரு நமக்குச் சார்வு) மேக₄ங்கள் நிறைந்திருக்கும் நீலவானத்திலே நிலைத்திருக்கும் மின்னல்போலே ஹிரண்யவர்ணையாகப் பிரகாசிக்கும் பெரிய பிராட்டியார் நமக்கு ஸமாஶ்ரயணீயை, "வான் அமரும் மின் இமைக்கும்" என்கையாலே, உலகிற்காணும் மின்னல்போலே சஞ்சலையாயிராமல், நிலையாயிருக்கும் மின்னல்போலே பிரகாசிக்கிருள் இவள் என்கிறது. இத்தால் இவளுடைய புருஷகாரத்வத்துக்கு உறுப்பான நித்யயோக₃ம் சொல்லப்படுகிறது. நம்மிடம் ஆநுகூல்யலேஶம் பிறந்த கணத்திலேயே புருஷகாரம் செய்வதற்காக 'இறையும் அகலகில்லேன்' என்று திருமார்பிலேயே நித்யவர்ஸம் செய்கிருள்ன்ரே இப்பிராட்டி. (வண் தாமரை நெடுங்கண் திரு நமக்குச் சார்வு) அடியாரை நெஞ்சாரக் குளிர நோக்குகிற உதா₃ரமான—தாமரையைப்போலேயிருக்கிற அழகிய நீண்ட திருக்கண்களை உடைய திரு நமக்கு ஆஶ்ரயணீயை. நம்மைக் குளிர நோக்கி அருளாலே திருத்துகின்றவள் இவள் என்னும் அர்த்த₂த்தைக் காட்டுகிருர். 'வண்' என்று 'உதா₃ராம்' என்று ஸ்ரீஸூக்தத்தில் புகழப்பட்ட இந்த ஔதா₃ர்யம் உணர்த்தப்படுகிறது. (தேனமரும் பூமேல் திரு நமக்குச் சார்வு) தேன் நிறைந்திருக்கிற தாமரைப் பூவின்மேலே, அப்பூவின் மணமும், நிறமும். அதிலுள்ள தேனின் சுவையும் ஓர் வடிவுகொண்டாற்போலே அமர்ந்திருக்கும் பிராட்டி நமக்கு ஆஶ்ரயணீயை. இத்தால், தனது அழகாலும் இனிமையாலும் ஸர்வேஶ்வரனைத் திருத்தி நம்மை அவனோடு சேரவிடு



தேன் செறிந்த பூவின்மேலே இருக்கிற திரு. (சார்வு நமக்கென்றும்) பெரியபிராட்டியார் நமக்கு எல்லாக் காலத்துக்குமபாஶ்ரயம். 100.

மூன்ரும் திருவந்தாதிக்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிய
வ்யாக்₂யாநம் ஸம்பூர்ணம்.
பேயாழ்வார் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்,

---

திருந்துள்ள பூவின்மேலே எழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியார் தன்னையொழிய வேறு புகலின்றியே இருக்கிற நமக்கு ஆபத்து உள்ளபோதோடு இல்லாத போதோடு வாசியற ஸர்வகாலத்திலும் அபாஶ்ரயம். 100.

மூன்ரும் திருவந்தாதிக்கு அப்பிள்ளை அருளிய
உரை நிறைவுபெற்றது.
பேயாழ்வார் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

கின்றவள் என்று உணர்த்தப்படுகிறது. (நமக்கு என்றும் சார்வு) கருணைக்கடலான ஸர்வேஶ்வரன் திறத்திலும் தீரக்கழிய அபராத₄ம் செய்து கடல் கொதித்தாற்போலே அவனையும் கொதிக்கவைக்கும் நமக்கு, ஆபத்து உண்டானவேளையோடு, இல்லாதவேளையோடு வாசியற எல்லாக்காலத்திலும் பெரிய பிராட்டியார் ஆஶ்ரயணீயையாயிருக்கிருள். "அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்ய வர்த்த₄கையுமாயிருக்கும்" [166] என்னும் முமுக்ஷுப்படி சூர்ணையும், அவ்விடத்தில் மாமுனிகளின் வியாக்கியானமும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. "ஆக, 'திருக்கண்டேன்' என்று லக்ஷ்மீ கடாக்ஷத்தோடு தொடங்குகையாலே 'திரு நமக்கு என்றும் சார்வு' என்று பெரிய பிராட்டியாரே நமக்கு என்றும் ஆஶ்ரயணீயை என்று அறுதியிட்டுப் பிரபந்தத்தைத் தலைக்கட்டியருளினாராயிற்று. 100.

ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶந பத்ராதி₄பனை
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய
மூன்ரும் திருவந்தாதி வ்யாக்யானம் நிறைவு பெற்றது.
பேயாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பேயாழ்வார் திருநக்ஷத்திர தனியன்

तुलाशतभिषग्जातं मयूरपुरि कैरवात्।
महान्तं महदाख्यानं वन्दे श्रीनन्दकांशजम्॥

துலா ஶதபி₄ஷக்₃ஜாதம் மயூரபுரி கைரவாத்।
மஹாந்தம் மஹதா₃க்₂யாநம் வந்தே₃ ஸ்ரீநந்த₃காம்ஶஜம்॥

[திருமயிலையில் ஓர் அல்லிக்கேணியிலே, ஐப்பசியில் சதயத்தில் பரமபுருஷனின் நாந்த₃கவாளின் அம்ஶமாய் அவதரித்த பேயாழ்வாரை வணங்குகிறேன்.]

★

## பேயாழ்வார் நித்ய தனியன்

दृष्ट्वा तुष्टाव यो विष्णुं रमया मयिलाधिपम्।
कूपे रक्तोत्पले जातं महदाह्वयमाश्रये॥

த்₃ருஷ்ட்வா துஷ்டாவ யோ விஷ்ணும் ரமயா மயிலாதி₄பம்।
கூபே ரக்தோத்பலே ஜாதம் மஹதா₃ஹ்வயமாஶ்ரயே॥

[கிணற்றில் செவ்வல்லிப்பூவில் அவதரித்தவராய், திருவோடு மயிலைக்கதி₄பனான விஷ்ணுவைக் கண்டு துதித்தவரான பேயாழ்வாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

★

## பேயாழ்வார் வாழி திருநாமம்

திருக்கண்டேனென நூறுஞ் செப்பினான் வாழியே
சிறந்த வைப்பசியிற் சதயம் செனித்த வள்ளல் வாழியே
மருக்கமழும் மயிலைநகர் வாழவந்தோன் வாழியே
மலர்க்கரிய நெய்தல்தனில் வந்துதித்தான் வாழியே
நெருக்கிடவே யிடைகழியில் நின்றசெல்வன் வாழியே
நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில்வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப் பிரான்தொழுவோன் வாழியே
பேயாழ்வார் தாளிணை யிப்பெருநிலத்தில் வாழியே.

—●—